சிறந்திருந்த மான்மாவுஞ் செகமெல்லா நிறைந்திருந்து
மறைந்தெனக்குத் தோன்றாத வகையேது சொல்லுமெ

சத்துர்சித் தானந்தந் தானென்று மதனுடனே
யொத்துற்று நாம வுருவஞ் சகமாகி.

இருக்கையினிற் றோற்று நிலைமூன்றும் பிரமமென
மிக்கில்லாரும் பின்னிரண்டு மறிசகமென் றுரைத்தவரே

அறிந்துகொண்ஞானத்தாலே யான்மாவை யென்றுரைத்
சிறந்தொளிரு மான்மாவுந் திருசியமா மோவெனவே. (௧

முந்தியஞா னத்தாலே முதிருமஞ்ஞானந் துறக்கிற்
சிந்தையிலான் மாச்சுயமாய்த் திகழுமென்று சொன்னவே

இனியமுத்திச் சுகமிருப்ப தெப்படியென் றேவினவு
வனுபவத்தி லறிவிடயா னந்தம்போ மென்றவரோ. (௧௫)

மனலயம்பெறுந் தவரேது மற்றிவரோ முத்தரெனச்
சனகனைப்போற் சீவன்முத்தர் தாமுமுள ரென்றவரோ. ()

சீவன்முத்தி யடைந்தோர்கள் செயலுமவர் தங்குணமு
நாவுரைக்கும் வாசகமு நானறியச் சொல்லுமென. (௧௭)

வருங்கருவு பிறப்பினொடு வளர்தல்பருத் தல்குறைத [ரோ
லொருங்கலுமெய்க் கென்றதனை யொறுத்திருப்பா ரென்றவ

பார்ப்பதுவுங் கேட்பதுவும் பகர்வதுவுஞ் செல்வதுவு
மேற்பதுவுங் கரணதன்ம மெனத்துணிவா ரென்றவரோ. ()

பசிதாக முயிர்க்கெனவே பயந்துக்கஞ் சுகந்காமம்
வசிரோப மதிக்கெனவே மகிழ்ந்திருப்பா ரென்றவரோ. ()

பிடுந்தா ரமுழுறவு மேவியென்று மிருந்தாலு
நீடுந்தா மரையிலைநீர் நிகராவா ரென்றவரோ. (௧௦௧)

பற்றிடுங்கா யமுந்தானும் பன்றுளொன் றுபினும்பி
னுற்றபுளி யம்பழமு மோடுமொப்பா ரென்றவரோ. (௧௦௨)

கூறுமுல கியற்கையுடன் கூடினுமெய்ஞ் ஞானம்வந்தோர்
சேறும்பிள்ளைப் பூச்சியும்போற் றிரிவார்கா ணென்றவரோ.

ததியூடு கடைந்தவெண்ணெய் தான்மோரிற் கிடப்பதுபோன்
மதியோடு கூடினும்பின் மயங்கார்கா ணென்றவரோ. (௧௦௪)

அருச்சுனன்றன் பொருட்டாக வனைவருக்கு ஞானம்வரப்
பொருந்தியதே சிகவடிவாம் புண்ணியரே கண்வளரீர். (௧௦௫)

ஆயர் குலமாத ரனைவரோ டிரைப்புணர்ந்துந்
தூய பதினாறா யிரவருடன் றோய்ந்திருந்தும். (௧௦௬)

பரம முனிவர்முன்னே பரிச்சித்தைத் தீண்டியன்று
பிரமசாரி யஞ்செலுத்தும் பேரொளியே கண்வளரீர். (௧௦௭)

வெண்பா.

ஆதிமூ லங்கிசையற் காதிமறை யின்பொருளை
மோதி யுரைத்தமிந்த வுண்மைதனைக் - காதலுற்றுக
கற்றோருங் கேட்டோருங் காசினியில் வாழ்ந்துமுத்தி
பெற்றோர்கள் முத்தர்பெறும் பேறு. (௧௦௮)

## கீதாசாரத் தாலாட்டு

## முற்றிற்று.



ஸ்ரீ கிருஷ்ண சகாயம்.

உ

கடவுள்துணை.

ஸ்ரீ தத்துவராய சுவாமிகள்

அருளிச்செய்த

# திருத்தாலாட்டு.

## தத்துவப்பிரகாசம்.

அன்னைத் தரமாகி யாவர்க்கு மெய்தரிய
தன்னைத் தரமேனி சாத்தும் பெருமானே. (௧)

அருமம் பிறவித் துயரை நினைந்தடியே
னொருசம படிகண் டழுவித்த வாண்டகையோ. (௨)

விருமாயித் தனைத்தேட வெவ்வினையே னெஞ்ச
விருமைபக கனிசெய்த வெந்தை பெருமானே. (௩)

முனமோத மெல்லா மொழிவரிய மொய்கழல்கொண்
டெனமேய தனைகண் டெழுந்தருளி வந்தானே. (௪)

மன்கொன்றும் வானவர்க ணின்றுணங்க நானிலத்தே
பெண்கண் களிக்க வெழுந்தருளி வந்தானே. (௫)

வெந்தனை கீரச் சுருதி தொழும்பதத்தை
மந்தனை செய்ய மதிதந்த வள்ளலோ. (௬)

நந்தேசய் பிறவிக்கு நாயே னடுங்காம
லஞ்சேலஞ் சேலென் றருளும் பெருமானே. (௭)

தேசார் முனிவொருமா நின்றுணங்கத் தேனைக்
கூசாம லானக் கொடிபிட்ட கொண்டலோ. (௮)

நீட்டுகைக்கு முள்ள முருக்கிலை மேல்விடு
நாட்டுகைக்கு வீரக் கழலிட்ட கண்டகனே. (௯)

கண்குளிர நான்கண்டு கொள்ளக் கடிகமழுந்
தண்களப மெய்ந்நிறையச் சாத்தும் பெருமானே. (௧௦)

அனைத்துத் திசைகளுக்கு மப்பாலாய் நின்ற
தனக்குப் பரிவட்டஞ் சாத்தச் சமைந்தானே. (௧௧)

இங்கழுநீர் மாலை யெனக்கருளி யின்னளிசேர்
செங்கழுநீர் மாலை புனைந்தருளுந் தேசிகனே. (௧௨)

புண்டரீ கத்தவனுங் காணாத பொன்முடிக்கே
தொண்டர் திருமாலை சூட்டக் கொடுத்தானே. (௧௩)

செற்ற பிறவி நீறாகத் திருமுண்ட
மற்ற பிறைபோ லணிந்தருளு மண்ணலோ. (௧௪)

ஆங்கோயி லீதென் றடியே னகம்புகுதப்
பூங்கோயி லுள்ளே புகுதும் பெருமானே. (௧௫)

ஆத்த மறைகூற வந்த மடியிணைகண்
டேத்த வடியார்சூழா யின்புற் றிருந்தானே. (௧௬)

வேதனை மென்னுநா மோக்குதற்கு வீரசிங்
காதன மேறி யழுந்த விருந்தானே. (௧௭)

தோய முன்பாகத் தொழுதெழுமென் கைப்பொருளுங்
காயமுமா விப்புங்கைக் கொள்ளுங் கற்பகமோ. (௧௮)

புண்டரிகக் கைம்மலரென் புன்றலைமேல் வைத்தருளிப்
பண்டை வினைதீரப் பார்க்கும் பெருமானே. (௧௯)

ஆரா விருளை யறியாத சேவடியை
வாவாவென் றென்றலைமேல் வைக்கும் பெருமானே. (உ0)

வட்டை யொளித்து விடாமே யெனக்கென்னைக்
காட்டவா வென்ற கருணைத் தடங்கடலோ. (உக)

என்ன தியானென் றினியொருகா லத்தினுள்ளு
முன்ன லறவூ னுயிர்வேறு செய்தானே. (உஉ)

பூண்ட புலன்கள் பொறிவழியே போகாமே
மீண்டிரு வென்று விளம்பும் பெருமானே. (உங)

புற்கடந் தோன்றாத வண்ணம் புரளாமே
மற்கட மாமனத்தை மாட்டும் பெருமானே. (உச)

பொய்யாகு மெய்யில் வேறாகும் புருடனையே
கையா மலகமெனக் காட்டும் பெருமானே. (உரு)

உனைமறைய மூடு முணர்விலா மாயைக்
கனவிருளைக் காணென்று காட்டும் பெருமானே. (உசா)

கண்ட விருளைநீ காணாதே யவ்விருளைக்
கண்ட வறிவைநீ காணென்று சொன்னானே. (உஎ)

கண்ட வறிவுதனைக் கொண்டுன்னைக் கண்மறைத்த
பண்டை யிருளைநீ பார்த்துக்கா ணென்றானே. (உஅ)

கங்குலா மாயவிருள் காண்கிலேன் காண்கின்ற
தெங்கு மறிவென் றிசைக்கவிசைந் தானே. (உகூ)

சாதமா மிவ்வுடல நானல்லேன் சான்றாகும்
போதமே நானென்னப் போதிக்கும் போதகனே. (௩0)

எரணவு மிஞ்ஞாலத் தோற்ற நிலையிறுதி
காரணனா னபடி காட்டும் பெருமானே. (௩௧)

யானறிகை யாலே யறிவ னறிவதல்லே
னானறிவ னாகுமென நாட்டந் தருவானே. (௩௨)

சான்று மறிவுருவஞ் சாக்கியமா மிச்சகமுந்
தோன்றாத வண்ணஞ் சொருகுவித்த தோன்றலே. (௩௩)

இருந்த விருப்பினையும் யானறிவ தின்றித்
திருந்த விருக்க வருள்செய்த தேசிகனே. (௩௪)

அந்த வுபாதி யுனக்கான வப்பரிசே
யிந்த வுபாதியிறைக் கென்றும் பெருமானே. (௩௫)

தான்சகத்தைக் கண்டுந் தனைக்கண்டுந் தான்மறந்து
னான்பெயனத் தைனான் றுண்டிதற்று மென்றானே. (௩௬)

அழுந்த விருந்த விருப்பாரா லதுவிட்
டெழுந்திருந்த தாரா லியம்பிக்கா னொன்றானே. (௩௭)

வல்லிருண் மூடி யறியேனை மற்கடத்தைப்
பல்லிவரி கண்டு பதைப்பித்த பண்பனே. (௩௮)

பதையாத வண்ணம் பரஞ்சுடரைக் காட்டிச்
சிதையா விருளைச் சிதைவித்த சேவகனே. (௩௯)

நீட்சி செலவின்றி வேறின்றி விண்முதலாங்
காட்சியுங் கண்ணாகக் காணுங்கண் டந்தானே. (௪0)

கண்டகண் ணாலே கடலுலகும் பார்தலமு
மண்டமு நேராக வமிர்துசெய்த வண்ணலே. (௪௧)

உதிப்பமதெல் லாமு முணர்வன் றுணர்வை
மதிப்பதுவும் விட்டுநீ வாளாவி ரென்றானே. (சஉ)

நாற்றஞ் சுவையொளியூ றோசையெலா நாட்டமெனுந்
தோற்றமுங் காணாதே சும்மாதி ரென்றானே. (சங)

சித்தசித் தீசத் திரிவிதமுந் தீர்ந்தபா
ழித்தனைக்கு முற்பத் தியுமிதுவே யென்றானே. (சச)

மும்மைப்பாழ் தீர மொழியா மொழியாலே
நம்மைப்பா ரென்று நவிலும் பெருமானே. (சரு)

அபாவபா வங்களுக் கப்பாலாய் நின்ற
சுபாவமாந் தன்சோதி சொல்லாமற் சொன்னானே. (சசு)

இவ்வா றறிந்தபின் சென்னவொண்ணு வின்பத்தைச்
செவ்வாய் மலராமற் செப்பும் பெருமானே. (சஎ)

ஆனந்த வெள்ளமென தங்கைக் கனியாக
மோனந்தன் னாலே மொழியும் பெருமானே. (சஅ)

ஆட்டின மாயக்கூத் தெனன வகத்துள்ளே
கூட்டெனை ஞானக்கூத் தாட்டிய வித்தகனே. (சகூ)

செல்ல லறுத்த சிவப்பிர காசனே
தொல்லை மறைதேர் சொருபா னந்தச்சுடரே. (ரு0)

சேய்வந்த வானவருங் காணாத சேவடியான்
வாய்வந்த வாடிகழ வாழும் பெருமானே. (ருக)

திருத்தாலாட்டு

முற்றிற்று.



சிவமயம்.

துறைமங்கலம்.

# சிவப்பிரகாச சுவாமிகள்

பொம்மைய பாளையம்

## சிவஞானபாலயதேசிகர்பேரில்

அருளிச்செய்த

# தாலாட்டு.

காப்பு.

நேரிசை வெண்பா.

அவஞானம் போக்கி யருண்ஞான மாக்குஞ்
சிவஞான தேவன் றிருமுன் - றவஞானத்
தாலாட் டெனுந்தமிழைச் சாற்றுதற்கு நற்றுணையா
மாலாட்டு மாமுகத்தன் வந்து.

நூல்.

திருவருளா லென்னைத் தெரிவிக்க விங்குத்
திருவுருவாய் வந்த சிவஞான தேசிகனே. (௧)

என்றுநித்த பூரணமா யின்பவறி வுண்மையாய்
நின்றபடி நிற்கு நிகழ்பிரம மென்றானே. (௨)

தன்சத்தி யாலாந் தலமங்க லிங்கமென
வென்சத்தி பாதத் தெழுந்தருளிச் சொன்னோனே. (௩)

நண்பாகு மிட்டலிங்க நன்றாம் பிராணலிங்க
மொண்பாவ லிங்கமா மோர்பொருளிங் கென்றோனே. (௪)

ஆசார லிங்கமுட னருங் குருலிங்கந்
தேசாரு மிட்டலிங்கஞ் சேர்ந்தாகு மென்றோனே. (௫)

அந்தப் பிராணலிங்கத் தாகுஞ் சிவலிங்க
மிந்தச் சரலிங்க மென்றசிவ ஞானியோ. (௬)

பாவலிங்கந் தன்னிற் பரமப் பிரசாதந்
தாவகன்ற மாலிங்கஞ் சார்ந்துவரு மென்றோனே. (௭)

ஏகாங்க மேயாகு மின்பத் தியாகாங்கம்
போகாங்கம் யோகாங்கம் போற்றியறி யென்றோனே. (௮)

பத்தனுமா யேசனுமாம் பன்னுந் தியாகாங்க
முப்த்துணரி னென்ன வுணர்த்தும் பெருமானே. (௯)

பிரசாதி யோடு பிராணலிங்கி யாகு
முறைசாரும் போகாங்க மொன்றென்று சொன்னோனே. (௧0)

சாற்றுமியோ காங்கஞ் சரண னயிக்கியனும்
போற்றிநீ காணென்று போதித்த தேசிகனே. (௧௧)

அங்க நவவிதமு மந்தநவ லிங்கமொடு
தங்கு மெனவெனக்குச் சாற்றும் பெருமானே. (௧௨)

விழுங்கல் பருகலொடு மெல்லலா சார
மொழுங்கிற் குருசிவமு முற்றிடுமிங் கென்றோனே. (௧௩)

சோகிய லேகியமுஞ் சொன்ன விவற்றறிவு
மேகியுறும் பின்மூன் றிலிங்கத்து மென்றானே. (௧௪)

இந்தக்கா யார்ப்பணங்க ளிட்டலிங்கத் தென்றெனக்குச்
சந்தப் படவுரைத்துத் தந்தசிவ ஞானியோ. (௧௫)

பீடமிடை வட்டம் பெருங்கோ முகநாள
மாடனுறு கோளகமா சாராதிக் கென்றானே. (௧௬)

நாற்றஞ் சுவையுருவ நல்லூ றொலிநிறைவு
மாற்றுஞ் சடுலிங்கஞ் சாருமெனச் சொன்னானே. (௧௭)

வேர்முதலாங் கந்தம் விளங்கு மரமுதலாங்
கூர்மணமா சாரங் குருவினிலா மென்றானே. (௧௮)

களிராதி கந்தமுகை தான்முதலாங் கந்த
மொளிரார் சிவசரத்தி னுற்றிடுமிங் கென்றானே. (௧௯)

காய்முதலாங் கந்தமெலாங் காசில்பிர சாதத்துந்
தூய்மலிமா லிங்கத்துந் துன்னுமெனச் சொன்னானே. (௨௰)

மதுரந் துவர்கார்ப்பு வண்புளிகைப் பெல்லாஞ்
சதுரென் றிருத்தியவா சாராதிக் கென்றானே. (௨௧)

பொன்மைவெண்மை பச்சைமாஞ் சிட்டபோ தங்களெலா
நன்மையவா சாராதி நண்ணுமென்ற நாயகனே. (௨௨)

வன்மைமென்மை வெம்மைதண்மை வாய்ந்த மிசிரமெலாஞ்
சின்மையவா சாரர்தி சேர்ந்துகொளு மென்றானே. (௨௩)

கஞ்ச நரம்புதோல் கண்டகுழ லாதியொலி
யஞ்சொலிவை யெல்லாமவ் வாறுமுறு மென்றானே. (௨௪)

மணமுதலா மைந்து வகைநிறைவெ லாமு
நணுமுறையா சாராதி நாடிலெனச் சொன்னானே. (உரு)

இம்முறையா ருரு மிலங்குகர ணார்ப்பிதமென்
றெம்மறிவு கொள்ள வியம்புசிவ ஞானியோ. (உசு)

தொட்டறிந்திங் கொன்றைத் துணிந்து நுகர்ந்துமகிழ்ந்
திட்டமைந்து நிற்கு மிலிங்கங்க ளென்றானே. (உஎ)

கூறுமிவை யாவினுமிக் கொள்கை பெறுமிலிங்க
மேறு மிரட்டுநூற் றெட்டாகு மென்றானே. (உஅ)

உருவஞ் சுவைநிறைவா யோங்கர்ப் பிதங்கண்
மருவுந் திறஞ்சொன் மயிலை மலைவிளக்கோ. (உகூ)

சுத்தசித்த மோடுபிர சித்தமெனத் தோன்றுபுபா
சத்தமுத்த மாக்குபிர சாதமரு ளாயகனே. (கூ0)

அங்கலிங்க சத்திபத்தி யத்தமுக வர்ப்பிதசே
டங்களிவை யட்ட சயிலமெனச் சொன்னானே. (கூக)

குசித்த மழிந்து குடும்பநோய் மாற்றுஞ்
சுசித்தமதி லாசாரந் தோன்றுமெனச் சொன்னானே. (கூஉ)

குபுத்தி யழிந்து குருநெறியி னிற்குஞ்
சுபுத்திதனி னிற்குஞ் சுடர்குருவிங் கென்றானே. (கூகூ)

ஆங்கார மில்லா நிராங்கார வத்தமதி
னீங்கா திலகு நிகழ்த்துசிவ மென்றானே. (கூச)

கமன மழிந்து கறையற்று நிற்குஞ்
சுமனமதி னின்றிலகுந் தூயசர மென்றானே. (கூரு)

மெய்ஞ்ஞான மாகி மிளிரும் பிரசாதஞ்
அஞ்ஞான வத்தமதிற் றோன்றுமெனச் சொன்னானே. (௩௬)

துற்பாவ நீங்கித் துணிவுபடு மத்துவித
சற்பாவ மாலிங்கஞ் சாருமெனச் சொன்னானே. (௩௭)

ஆதார பீடங்க ளாறினுமவ் வாறிலிங்க
மீதாக வைத்து விளங்கச்செய் வித்தகனே. (௩௮)

ஆறு முகங்களுமவ் வாறுசா தாக்கியமு
மாறு வருணைமுமா மாறிலிங்க மென்றானே. (௩௯)

பத்தனொடு மாயேசன் பார்ப்பரிய வாசார
மெய்த்தகுரு நான்கும் விளங்குகுரு வென்றானே. (௪0)

பிரசா தியுமப் பிராணலிங்கி தானு
முறைசால் சிவசரமு மோங்கிலிங்க மென்றானே. (௪௧)

ஒழிந்தவங்க லிங்க மொருநான்கு நம்பா
லெழுந்தருளுஞ் சங்கமமென் றின்பந் தருவானே. (௪௨)

உருவ முருவருவ முற்றறிதற் கெட்டா
வருவமென நின்றிடுமவ் வாறுமெனச் சொன்னானே. (௪௩)

மாசுதரு தூலாதி மானவிசு வாதியே
யாசி றியாகாங்க மாதியா மென்றானே. (௪௪)

விரிந்தன வெலாமும் விரிந்தமுறை சென்றே
யொருங்கியங்க லிங்க வுபயமா மென்றானே. (௪௫)

கடத்தி னுபாதியா காயமுற்ற வாபோ
லடுத்த வுபாதியா லங்கலிங்க மென்றானே. (௪௬)

தங்கு மிலிங்கமாந் தற்பதமத் தொம்பதமே
யங்க மபிக்கிய மசிபதமென் றுண்டானே. (சஎ)

ஆக முயிர்துரிய ளுய்நின்ற போமெதைமைத்தான்
சோகமனத் தானுகத் தோன்றும் பெருமானே. (சஅ)

அமைத்தபரஞ் சுத்தத் தசுத்தமதிற் சீவன்
றமைப்பகுதி யிற்றேன்றுந் தத்துவங்க ளென்றானே. (சகூ)

நிரஞ்சன சூனியமா நிட்களத்திற் சித்து
வருஞ்சுடர்சின் ஞுதாதி வாய்ப்பவெனச் சொன்னானே. ()

மூலசித்து நாதாதி மூன்றும் புணர்ந்தாகு
மாலகற்றுஞ் சோதிமய மாலிங்க மென்றானே. (ருக)

அகராதி மாலிங்கத் தாயவை கூடித்
தகவா மோங்கார சதாசிவமா மென்றானே. (ருஉ)

அந்தச் சதாசிவத்தி னோம்முகத்து மைம்பூதம்
வந்துற் றிதயத்தான் மாவருமிங் கென்றானே. (ருங)

அப்பூதம் பஞ்சீ கரித்திருபத் தைந்தாகி
மைப்பூணு மான்மாவை மன்னியிடு மென்றானே. (ருச)

ஆணவத்தான் மூடனு மாருயிர்க்கு முன்வினையான்
மாண வளிக்குமிறை மாயைவடி வென்றானே. (ருரு)

மேலைவினை யாலுழலு மெய்யுயிர்க்குப் பாகமலக்
காலமுறச் சுத்தக் கரணமா மென்றானே. (ருசு)

கூறுமனச் சுத்தமுறக் கொண்டுபிண்ட நாமத்தை
நூறு தலநெறியு நோக்குமெனச் சொன்னானே. (ருஎ)

கிரியைமன பாவங் கிடைப்பரிய ஞான
மருவிவிடா தங்கம் வயங்குமெனச் சொன்னானே. (௫௮)

ஞாதிருவு நின்றறியு ஞானனே யங்களுமற்
றேதமற வென்று மிருந்தபடி வைப்பானே. (௫௯)

வானேத்த வென்று மருவற் கரியபத
நானேத்த நல்குசிவ ஞானகுரு தேசிகனே. (௬௦)

மிடியற் கெளிது விழியுற்ற பொன்போ
லடியற்கு வந்திங் ககப்பட்ட வாரமுதோ. (௬௧)

கயிலைமலை மேவுங் கடைப்பிடியாற் பீர்சான்
மயிலைமலை மீதிங்கு வந்தமர்ந்த மாமணியோ. (௬௨)

எல்லாக் கலையுணர்ந்து மெய்தாப் பொருளையொரு
சொல்லாற் றிகழ்த்துதற்குத் தோன்றும் பெருமானே. (௬௩)

சீலந் திகழ்த்துமதிச் சின்னமின்றி யும்படியோர்
கோலஞ் சிவமெனவுட் கொள்ளுமருட் குன்றமோ. (௬௪)

மண்களிக்க நாயேன் மனங்களிக்கக் கண்டுகொண்டு
கண்களிக்க வந்த கருணைப் பெருங்கடலோ. (௬௫)

சம்பந்த னன்றொருநாட் டானுண்ட பாலனு
வெம்பந்த நீங்க வினிதமுது செய்தானே. (௬௬)

வேண்டுவவெல் லாமுமாம் வெண்ணீ றளிப்பதற்குத்
தீண்டு மலர்க்கைச் சிவஞான தேசிகனே. (௬௭)

இம்மை மறுமை யிரண்டும் பெறவெமக்குச்
செம்மைதர வந்த சிவஞான தேசிகனே. (௬௮)

அரசமய மன்றி யகங்களித்தெஞ் ஞான்றும்
பரசமய மும்பணியும் பங்கயப்பொற் றாளானே. (சுகூ)

தானபங்க னென்னுமதன் றன்னுணை யைக்கடந்து
மானபங்கம் பண்ணும் வலியொன் றுடையானே. (எ0)

அறியா தொருநா ளறையினும்வன் பாசஞ்
செறியா தருளுந் திருப்பே றுடையானே. (எக)

பூதமுத லெல்லாமும் போக்கியவற் றுண்மறைந்து
ஞாதிருவா மென்னை நயந்தறிவித் திட்டானே. (எஉ)

எந்தைசிவ சாதனங்கட் கெல்லாந் திருநீறு
முந்தியதென் றுண்மை மொழியும் பெருமானே. (எங)

உருத்திரனே யையமிலை யோருருத்தி ராக்கந்
தரித்தவ னென்றெமக்குச் சாற்றும் பெருமானே. (எச)

ஒண்மறையின் கண்ணு முருத்திரமவ் வஞ்செழுத்துங்
கண்மணியென் றையமறக் காட்டு மருட்கடலோ. (எரு)

அருவாகி நின்றசச்சி தானந்த வீசன்
குருவாகித் தன்னைக் கொடுக்குமெனச் சொன்னானே. (எசு)

பரம சிவமெனவும் பண்டைமறை போற்றும்
பிரமமென வும்பேர் பெறுமிலிங்க மென்றானே. (எஎ)

நிரஞ்சரமென் றீசன் றிருவுரு விரண்டுட்
பிரஞ்சரமென் றோதும் பவளவா யண்ணலோ. (எஅ)

அங்கம் புனைவோ னடிப்புனலல் லாதுபவப்
பங்கங் கழுவப் படாதென்று சொன்னானே. (எகூ)

அந்தக் கரணத் தழுக்கறுப்ப தெங்கள்பரன்
சந்தப் பிரசாதந் தாமென்று சொன்னானே. (௮0)

தருணமதிற் சீறுந் தனிவிழிகாட் டாமற்
கருணை குடியிருக்குங் கண்களொடு வந்தானே. (௮௧)

ஏறூருந் தான்வா ழிடமேநற் காசியுந்தென்
னாரூரு மம்பலமு மாக்குசிவ ஞானியோ. (௮௨)

தன்பாத தாமரைதோய் தண்புனலே கங்கையாய்
வன்பாச நீக்க வழங்குசிவ ஞானியோ. (௮௩)

மண்படைத்த நான்முகனார் மானுடர்த மொண்முகத்திற்
கண்படைத்த பேறுபெறக் காட்டு முருவானே. (௮௪)

ஆர்க்குங் கொடுநோ யனைத்துங் கடைக்கண்ணாற்
றீர்க்குங் கருணைச் சிவஞான தேசிகனே. (௮௫)

செப்ப முறவெனது சிந்தைவிட் டாசையெனுங்
குப்பை துகைத்துக் குடியிருக்க வல்லானே. (௮௬)

தன்னையரு ளாளனெனுந் தன்மை யுலகறிய
வென்னையடி யாரோ டெழுந்தருளிக் காத்தானே. (௮௭)

மெய்த்த வறிவாம் விளங்குகதை யொன்றெடுத்துத்
தத்துவமா மட்கலத்தைத் தாக்கும் பெருமானே. (௮௮)

வழுவின்றித் தன்மா வலியுலக மேத்த
மழுவின்றிப் பாவ மரமெறிய வந்தானே. (௮௯)

இணையாது மில்லா விடர்ப்பவவே லைக்குப்
புணையாக வந்தருளும் புண்டரிகத் தாளானே. (௯0)

ஊனே யுயிரோ வுயிர்க்குயிரோ வானந்தத்
தேனே யமுதோ சிவஞான தேசிகனே. (கூக)

அண்ட முழுது மணுவிற் சிறியவாக்
கொண்ட பெருமைக் குணக்குன் றனையானே. (கூஉ)

எங்கண் மலவிருளுக் கீண்டு மயிலைமிசைச்
செங்கதிர்போற் றோன்றுஞ் சிவஞான தேசிகனே. (கூங)

அற்பகலு மாறா தரனடியார்க் கிதலுறுங்
கற்பகமாய் வந்துதிருக் காஞ்சிநக ருற்றானே. (கூச)

பூணு மருள்வசவன் பூண்டசர பூசையன்று
காணு வெமக்கின்று காட்டுசிவ ஞானியோ. (கூரு)

விருப்புவெறுப் பின்மை விளக்கவென்புன் சொல்லைத்
திருப்பதங்கொள் கின்ற சிவஞான தேசிகனே. (கூசா)

பொறியூடு செல்லுமனப் போர்க்களிற்றைத் தன்றாட்
டறியூடு நிற்பத் தளைந்தசிவ ஞானியோ. (கூஎ)

பாடியுந்தன் சீர்த்தி பரவியுந்தன் பாதமலர்
சூடியுமிக் காலந் தொலைக்கவருள் செய்தானே. (கூஅ)

பொய்ம்மாயை யென்னும் புலியின்வாய்ப் பட்டேனைக்
கைம்மாறி லாமற் கருணைகொடு மீட்டானே. (கூகூ)

பத்தியுந்தன் பங்கயப்பொற் பாதமே பாடுகின்ற
சித்தியுந் தாளுஞ் சிவஞான தேசிகனே. (க00)

**சிவஞானபாலையதேசிகர் தாலாட்டு**

**முற்றிற்று.**



உ

வேலுமயிலுந்துணை.

# சிதம்பரசுவாமிகள்

அருளிச்செய்த

# தாலாட்டு.

[திருப்போரூர்ச் சந்நிதிமுறையி லுள்ளது.]

## காப்பு.

### நேரிசை வெண்பா.

கனகவரை யிருபாற் கங்கைவழிந் தாங்குக்
கனகருணை யேமதமாக் காட்டுங் - கனகவரைக்
கோதண்ட னீன்றதிருக் குஞ்சரத்தைக் கைதொழுவார்
தீதண்டார் சேர்வார் திரு.

## நூல்.

பூமாது நாமாது போதசுக மாமாது
தாமேவு போரூர்ச் சரவண நாயகனே. (௧)

மாணிக்க மால்வரைமேன் மன்னுசெக்கர் வானமென
வேணிப் பிரான்றோளின் மேவுஞ் சிறுகுருந்தே. (௨)

உலகீன்ற மாதா வுதவியபால் கஞ்ச
மலர்வாய்க ளாறு மணக்கின்ற வான்குருந்தே. (௩)

பெண்ணாய்ந்த கற்புப் பிடியும் பிணைமானுங்
கண்ணாரக் கண்டு களிக்கவரு கற்பகமோ. (௪)

நீலமயில் வாகனனே நெட்டிலைவே லாயுதனே
கோலநிறை கோழிக் கொடிபடைத்த சேவகனே. (௫)

ஆறிரண்டு தோளானே வாறு முகத்தானே
தேறுமறை கொஞ்சுஞ் சிறுசதங்கைத் தாளானே. (௬)

மகுடங்க ளாறு மணிக்குழைக ளீராறுந்
திகழ்கடக மீராறுஞ் சிலம்புந் தரித்தானே. (௭)

சடைமேற் பிறையைமுந்நூ றன்னாற் பிணித்தணிந்த
விடையான் மடிமேல் விளையாடு மாரமுதோ. (௮)

செஞ்சதங்கை கொஞ்சச் சிறுகிங் கிணியாடக்
கஞ்சமலர்த் தாளுமையாள் கண்களிக்க வந்தானே. (௯)

ஆய்மா ரறுவர்களு மம்பிகையுங் கங்கையின்னுஞ்
சேயேயென் றேந்திச் சிரமோந்து கொள்குருந்தோ. (௧௦)

கானந் திரிவேடர் கன்னிகைக்காகப் பரண்மேன்
ஞானங்கமழ் பாத நண்ணவைத்த நாயகமோ. (௧௧)

புராரிசிறு வாவென்னப் பூவுலகங் காக்கு
முராரிமரு காவென்ன முன்வந்து நின்றானே. (௧௨)

அமரா பதியி லமரரெல் லாஞ்சூழ்ந்து
தமராகி வாழ்த்தவெள்ளைத் தந்திமேல் வந்தானே. (௧௩)

அண்ட மனந்த மருளுருவி னின்றிலகக்
கண்டமரர் போற்றக் கனகவரை நின்றானே. (௧௪)

தவமுனிவர் தேவர் சயசயவென் றேத்த
நவவீர ராமணிக்கு நடுவிருந்த நாயகமோ. (கரு)

பொதிய முனியகத்துப் பொங்குமிரு ணீங்க
விதியு மறியா விளக்கேற்றுந் தேசிகனே. (கசா)

அருணகிரி நாத னருந்தமிழ்நாற் கிரன்
கருணைபெற வோதுங் கவிமாலைத் தோளானே. (கள)

பிரம னறியாப் பிரணவத்தி னத்த
மரனார் செவிகுளிர வன்றுரைத்த சற்குருவோ. (கஅ)

அரிவைமுரு காவென் றழைக்குமுன்னே வந்து
கரமுதவி நின்ற கருணைப் பெருந்தேவோ. (கசு)

வேலைக் கலைபயின்ற மேதகுபொய் யாமொழிக்குப்
பாலைக் கடைப்பிதென்று பகர்ந்தபெரும் பார்வலனே. (உ0)

தார்மார் பகனே சமரபுரி நாயகனே
சூர்மார் புருவத் தொளைத்தவடி வேலவனே. (உக)

குன்றமுங் கொக்குங் குரைகடலுஞ் சூர்மார்புங்
குன்றவடி வேலெறிந்த கொற்றவனே நற்றவனே. (உஉ)

சமரபுரித் தேவோ தணிகைமலைத் தேனே
வமரும் பழனிமலைக் கானமணி விளக்கோ. (உ

சீரலைவாய் முத்தோ திருப்பரங்குன் றத்தரசோ
ஏரகத்தி லென்று மிருந்தபெரு வாழ்வோ. (உச)

பழமுதிர் சோலைப் பரனே குறிஞ்சிக்
கிழவனென நல்லோர் கிளக்கும் பெருமானோ. (உரு)

சங்கப் பலகைத் தமிழைப் புலவோர்க்குப்
பங்கப் படாமற் பகர்ந்தபெரும் பாவலனே. (௨௬)

நாயினேன் செய்பிழைக ளோடா தெனதுளமே
கோயிலாக் கொண்டு குடியிருந்த மெய்ப்பொருளோ. (௨௭)

மோனவர்சூழ் போரூரை வந்தடைந்த பேர்க்கெல்லா
மோனசுகங் காட்டி முத்திதருந் தேசிகனே. (௨௮)

உள்ளத் திமிர மொழித்துச் சிவானந்த
வெள்ளத்து ளன்பர் விளையாட வைத்தானே. (௨௯)

அரனோடு வந்தம்மை யளித்தவள்ளப் பாலைப்
புரைதீர வுண்டவரைப் போதமுறக் கண்டானே. (௩௦)

பொற்றாளம் பொற்சின்னம் பொற்பார் சிவிகையொடு
நற்றாளப் பந்தரையு நம்பர்கையிற் பெற்றானே. (௩௧)

மதுரைச் சமண மதகரிக ளெல்லாஞ்
சிதறத் துரந்த சிவசமய கோளரியோ. (௩௨)

மயிலைநகர் தன்னில் வன்னியடு மென்பைக்
குயிலை நிகருமொழிக் கோதையாய்ச் செய்தானே. (௩௩)

அச்சா புரத்தி லனந்த முயிரையெல்லாம்
மூச்சோ டுளங்கடந்த பேரின்பம் வைத்தானே. (௩௪)

வந்தோர் பிணிதீர்க்கு மாமருந்தோ வன்பருக்குச்
சந்தோட நல்குஞ் சமரபுரி மாநிதியோ. (௩௫)

தாயோ தமரோவென் றந்தையோ சற்குருவோ
தேயாக் கருணைபொழி தென்போரி வேலவனே. (௩௬)

முத்தோ குலிசமோ மூதொளிமா ணிக்கமோ
சித்தோ தென்போரூர்ச் சிவானந்த வாரிதியோ. (௧௭)

பாலோ செந்தேனோ பழமோ பழமறையோ
மேலோர் புகழ்போரூர் வீற்றிருந்த பார்த்திபனோ: (௧௮)

அன்னமோ பைங்கிளியோ வம்பிகைகண் ணுக்கினிய
சொன்னமோ போரூர்ச் சுகபூரண வொளியோ. (௧௯)

ஞானக் கரும்போமெய்ஞ் ஞானானந்தக் கடலோ
தானற் புரர் போற்றுஞ் சமரபுரித் தண்ணளியோ. (௨௦)

என்றென்றே தாலாட்டி யெல்லோரு மின்புமுற
நன்றருளே செய்யுமெங்க ணாதன்போ ரூரிறையே. (௨௧)

## சிதம்பரசுவாமிகள் தாலாட்டு

முற்றிற்று.



ஹரிஃ ஓம்.

பெருமாள் தாலாட்டு

என்னும்

# ஸ்ரீ ராமர் தாலாட்டு.



## காப்பு.

பேரான அயோத்திப் பெருமாளைத் தாலாட்டச்
சீரார் குருகையர்கோன் சேவடிகள் காப்பாமே.

## நூல்.

அன்றமரர்க் காக வயோத்தியெனும் பட்டணத்தில்
சென்றன் றவதரித்த திருமாலைச் சொன்னாரோ. (௧)

தெள்ளுதமிழ் கொண்டாடச் சீரார் தசரதற்குப்
பிள்ளைவிடாய் தீர்த்த பெருமாளைச் சொன்னாரோ. (௨)

காவ லழியக் கருதிலங்கை தானழிய
மூவ ருடன்பிறந்து மூவுலகை யாண்டானோ. (௩)

கருதலர்கள் காலனோ கண்ணார்ந்த கற்பகமோ
பரிவுடைய தாயார்க்குப் பாற்குடமாய் நின்றானோ. (௪)

வீராதி வீரனே வேந்தர்சூ டாமணியே
ஸ்ரீராம னென்னுந் திருநாமம் பெற்றானே. (௫)

பேராற் பெரியவனே பேருலகை யாண்டவனே
சீரார் சிறப்புடைய செங்கண்முகில் மேனியனே. (௬)

குவலயத்தோர் கொண்டாடக் குடுமிப் பிராயத்தே
கலைமுனிவன் சொற்கேட்டுத் தாடகையை யெய்தவனே. (௭)

மாசிலா முத்தே மணிவயிரத் தோளானே
கோசிகனார் வேள்விக் குறைதவிர்த்த கொற்றவனே. (௮)

அரியகுடிக் கரசோ வாடவர்க்குட் போரேறே
பெரியதொரு சிலையைப் பெண்வடிவு செய்தவனே. (௯)

அலைகடல்சூழ் வையகத்தே யார்க்கு மசைக்கவொண்ணாச்
சிலையைவளை யக்குனித்துச் சீதைமணஞ் செய்தவனே. (௧௦)

தாதைதன் சொற்கேட்டுத் தாமமுடி சூடாமல்
சீதையுடன் கானகத்தே சென்ற பெருமானோ. (௧௧)

சித்திர கூடத்தே சேர்ந்து பரதனுக்கு
பத்திசெய்ப் பாதுகையும் பாரரசு மீந்தானே. (௧௨)

தாமமணி மார்பனே தம்பிதுணை யுள்ளவனே
மாமுனிவர்க் கெல்லாம் மனக்கவலை தீர்த்தவனே. (௧௩)

தாக்குடனே பேசுந் தனக்கடங்கா சூர்ப்பநகை
மூக்கரிந்த சேவகற்கு முன்பிறந்த சேவகனே. (௧௪)

தன்மாயை காட்டித் தையலுள்ள மாலாக்கும்
பொன்மானின் பின்போன புண்ணியனைச் சொன்னாரோ. ()

அக்கா னகத்தே யணிமயிலைத் தேடுதற்குச்
சுக்கிரீ வன்றனுடன் றோழமையைக் கொண்டானே. (௧௬)

கோல மதகளிறே கொற்றவர்தம் போரேறே
வாலிதனைக் கொல்லவொரு வாளியெய்த வல்லவனே. (௧௭)

ஆழி கொடுத்தே யனுமானைத் தூதனுப்பி
வாழு மிலங்கைநகர் வழிபார்த்து நின்றானே. (௧௮)

இருங்கடலைத் தாண்டி யிலங்கைநகர் தீமூட்டித்
திரும்பியனு மானுரைக்கச் சீதைசெயல் கேட்டவனே. (௧௯)

வானரங்க ளென்னு மகாசேனை தன்னுடனே
தானிலங்கை வேரறுக்கத் தண்டெடுத்த சேவகனே. (௨௦)

அடல்பெரிய வீரியனே யன்புகுடி கொண்டவனே
கடல்கலங்க முன்னாள் கணைவாங்குங் காவலனே. (௨௧)

அலங்கும் பெருங்கடலைத் தூர்த்தேறி யப்புறம்போய்
இலங்கைநகர் கண்ட விராகவனைச் சொன்னாரோ. (௨௨)

கொக்கரித்து வானரங்கள் கூத்தாட வெத்திசையும்
அக்கடலைப் பின்விட் டரக்கர்பதி புக்கவனே. (௨௩)

குன்றுபோல் வந்த கொடியதொரு ராவணனை
இன்றுபோய் நாளைவா வென்ற பெருமானோ. (௨௪)

சீரரக்கர் சேனையெல்லாஞ் சென்றுபடும் போர்க்களத்தில்
வேரறுத்துத் தேவர்சிறை மீட்ட பெருமானோ. (௨௫)

நாடி யரக்கர்பதி நூலா யிரவருடன்
கூடிவரும் ராவணனைக் கொன்ற பெருமானோ. (௨௬)

பத்துமணி முடியும் பத்திரண்டு திண்டோளும்
தத்திவிழ வெய்த தடம்பெரிய சேவகனே. (௨௭)

பூண்டமணித் தேரும் பொன்னிலங்கை மாநகரும்
மீண்டுமவன் றம்பி விபீடணனுக் கீந்தவனே. (௨௮)

மட்டவிழ்தார் சீதைசிறை மாற்றியவ டன்னோடும்
அட்டமுடை யயோத்திநகர் சார்ந்தரசு செய்தவனே. (௨௯)

ஸ்ரீராம ராமனே சீதைசிறை மீட்டவனே
பேராற் பெரியவனே பேருலகை யாண்டவனே. (௩௦)

செப்பமுடன் சேர்த்தெடுத்த சீராமர் தாலாட்டை
முப்பதுங் கற்றவர்கள் மூவுலகை யாள்வாரே. (௩௧)

## ஸ்ரீ ராமர் தாலாட்டு

முற்றிற்று.



உ

சிவமயம்.

முருகன் துணை.



ம-௱-௱-ஶ்ரீ வித்வான் திருஎவ்வுளூர்

இராமசாமி செட்டியாரவர்கள்

இயற்றிய

திருப்பரங்கிரிக்

# குமரவேள் தாலாட்டு.



## காப்பு.

சேலாட்டும் பண்ணைத் திருப்பரங்கி ரிக்குகன்றன்
றாலாட்டுக் கைந்துகரத் தந்திமலர்த் தாள்பணிவாம்.

## நூல்.

பூமேவும் வேதன் பொறிமார் பகன்சொலரன்
றாமேவு நன்னுதற்கட் டோன்றுஞ் சுடருருவோ. (௧)

சீர்சேர் சுடர்ப் பொறியைச் செஞ்சுடரோன் கையேந்தி
வார்சரவ ணத்தடத்தே வைக்க வளர்ந்தவனே. (உ)

சிவனும்வெண் ணீறிலங்கச் சேர்திலக நெற்றித்
தவள மதிநிகர்பூந் தண்முகமோ ராறுனே. (௩)

உறவிலா வாறு முகமலர வோராறு
பாவையர்பா லூட்டவுண்ட பண்ணினிய வாயானே. (௪)

பெற்றோர்கற் றோர்க்குப் பெருங்கருணை காட்டியன்பு
முற்றோங்க மேவுமியன் மூந்நான்கு கண்ணனே. (௫)

எண்டருசீர் முத்தமிழி னின்சுவையைக் கொண்டுருநுங்
குண்டலஞ்சே ரீராறு கோலவள்ளைக் காதானே. (௬)

செயிர்தீர்மா ணிக்கமணி சேரைம் படையாம்
வயிரமணித் தார்துலங்கும் வண்ணமணி மார்பானே. (௭)

மாலெனுமம் மானும்பொன் மானுங்கண் டுண்மகிழப்
பாலவிளை யாடல்செயும் பன்னிருகைப் பெம்மானே. (௮)

தாம்பி முகன்புகழச் சோதிநவ ரத்நமணிச்
செம்பொற்றண் டைகலிக்குஞ் செந்தளிர்ப்ப தாம்புயனே.()

தவநா ரதர்முனஞ்செய் தக்கமகந் தோன்று
நவமார் தகரிவர்ந்து ஞாலம்வலம் வந்தவனே. (௧0)

உள்ளத்தன் பார வுமையாள் களபமுலை
வள்ளத் தமுதுதர வாங்கியுண்ட காங்கெயனே. (௧௧)

காலின்மணிக் கிண்கிணிகள் கல்லெனநன் கோலமிட
வேலு மரன்றனெண்டோ ளேறிவிளை யாடுமன்னே. (௧௨)

விந்தைபுறும் வேதன் மெலியச் சிறையிலிட்டுத்
தந்தைக்கோங் காரவுரை சாற்றுங் குருபரனே. (கங)

வேத நெறிதழைக்க வேதாக மஞ்செழிக்கப்
போதகஞ்செய் தோங்குபரி பூரணக்ரு பாநிதியோ. (கச)

முத்தேவர் விண்ணோர் முனிவரரெந் நாட்டவரு
மெய்த்தேவ வென்றுநிதம் வேண்டுஞ் சிகாமணியோ. (கரு)

நாலா ரணம்பரவு நாரா யணியளித்த
வேலா யுதமேந்தும் விரப்ர தாபமன்னே. (கசா)

கொங்கவிழ்ம லர்க்குழலார் கூர்நயன வண்டுகள்பாய்
செங்கடப்பந் தாரிலங்குஞ் சீர்சேர் புயாசலனே. (கஎ)

கார்த்திகே யப்பேர்கொள் காவலநீ காத்திடெனச்
சீர்த்தியுறு மந்தணர்கள் சேவிக்கும் வான்பொருளோ. (கஅ)

இச்சைமிகப் பச்சைமயி லேறியொரு மாங்கனிக்கா
யுச்சிதமா யோடி யுலகைவலம் வந்தவனே. (ககூ)

ஆலமர்ந்த நால்வோர்க் கவிர்மெய்ந் நிலைகாட்டு
மேலவர்க்கு மேலாய் விளங்கும் குருமணியோ. (உ0)

கண்மணியோ மேலாக் கருதும் பணிமணியோ
விண்மணியோ யோகியரும் வேண்டுஞ்சிந் தாமணியோ. (உக)

முக்கனியோ தேனோ முதிர்தீஞ் சுவையமுதோ
தக்கவர்க ளேத்துஞ் சடாட்சரத்தின் சற்பொருளோ. (உஉ)

தத்துவப்பூங் கொத்தோ சத்தர்நிதம் போற்றுசித்தோ
சுத்தர்வேய் முத்தர்குளக் கண்ணுதித்த வாணிமுத்தோ. ()

பண்ணோரு மின்ப ... னே நிராமயனே
விண்ணோர் கருதுமனை வெட்சியணி யும்புயனே. (உ௪)

வானையளா வும்பொ ... க மாமுனிவ னுள்ளமிசை
ஞானவொளி வீசு ... மணிவிளக்கோ. (உ௫)

சொற்பரங்கி ... லைமலை யோகன்செந்
திற்பதிகுன் றுட ... ஞ் ... க்கலமே வும்பரனே. (உ௬)

... திருஞ் செம்பொ ... நிலைபதிக்க வைபக்கொடியா
ளோர்வதிய முதகபட்டெ ... பக் களஞ்சியமோ. (உ௭)

என்னரியபோ தெல்லை மெதிர்தோன்றி வாழ்வுமிக
நன்றும் படிவரங்க ளள்ளும் தயாநிதியோ. (உ௮)

பத்தர்செய்த குற்றங்கள் பாரா துளம்பொறுத்துச்
சித்தியளித் தாளுஞ் சிவஞான தேசிகனே. (உ௯)

எயுமடி யேன்ற னிடர் ... த்தென் சிந்தமுமோர்
கோயிலென வுள்ளத்திற் கொண்டுறைசெ வக்கொழுந்தோ. ()

அக்ரம சூரபத்ம னாதி யசுரரற
விக்ரமங்காட் டெவ்வெளி வேண்டுமுய ராண்டகையோ. ()

தவவீர மேவசுரர் தம்மொடமர் செய்ய
நவவீரர் சூழநடு நாயகமா நின்றவனே. (௩௨)

வானோர்சு ரேசனொடு வானவரும் வந்திறைஞ்சச்
சேனா பதியாகச் சேர்ந்தமர்செய் சேவகனே. (௩௩)

வீரமிகு தாருகனோர் வெற்பாகக் கண்டுவைவேல்
சோரமற விட்டுத் தொளைத்துவெற்றி கொண்டவனே. (௩௪)

ஆயிரத்தெட் டண்டங்க ளாண்டவிறற் சூரபன்மன்
சாயக்கூ றிட்ட சமரவடி வேற்கரனே. (௩௫)

சூரா தியரொழியத் துங்கவடி வேல்விடுத்து
வீராதி வீரனென மெய்ப்பேர்கொள் வித்தகனே. (௩௬)

தீயனெனுஞ் சூரபன்மன் சேவன்மயி லாகிநின்று
தூய சரணிறைஞ்சித் தோத்திரிக்கக் காத்தவனே. (௩௭)

விசயமிகக் கண்டவண்டர் வேண்டவெள்ளை யானை
யிசையும் பவனிவந்தங் கின்பருளுஞ் செவ்வேளோ. (௩௮)

விண்ணரசுங் கற்பமைந்த மென்சசியு மெய்ச்சரிய
பெண்ணரசொண் டெய்வப் பிடியைமணஞ் செய்தவனே. ()

திருமுருகா வென்றொருபெண் சிந்தையிற்சிந் திக்கு
மருமையுணர்ந் தங்கை யளித்தாண்ட பூரணனே. (௪0)

கற்றுணர்நக் கீரன் கவின்முருகாற் றுப்படைநா
லுற்றமணத் தார்போ லுவந்தருளு மொள்ளொளியோ. (௪௧)

மாமன் மருமகனே மன்னன் றிருமகனே
கோமதிப ரங்கிரிவாழ் கோனும் பெருமகனே. (௪௨)

பூண்பங் கயப்பதனே பூரணியி னற்சுதனே
மாண்பமைப ரங்கிரிக்கண் வாழும்பா ரங்கதனே. (௪௩)

சுகமாரு நற்றவனே தொல்கலைகள் வல்ல
தகுசீர் பரங்குன்றந் தங்குமெங்கள் கொற்றவனே. (௪௪)

தொழுஞ்சுரர்சே னைபதியோ சொல்லருஞ்சீர் மேவுஞ்
செழும்பரங்கி ரிக்கட் சிவானந்த வாரிதியோ. (௪௫)

வானுறுதெய் வப்பிடிக்கும் வண்குறவர் பொற்கொடிக்குந்
தான மழகளிறே தண்பூங் கொழுகொம்பே. (சசு)

அன்பிற் புகழ்சொ லருணகிரி நாதர்தமக்
கின்பமைமந் பேறளிக்கு மேர்ப்பரங்கி ரிக்கரசே. (சஎ)

வன்பிணிதா ரித்திரம்பேய் மாமலடு கூன்செவிடு
துன்பூமை நீங்கியுய்யத் தாய்வரந்தந் தாள்பரனே. (சஅ)

என்னைப் புகழ்ந்துரைக்கும் யாவர்களு மின்பமுற
மன்னுந் திருவருள்செய் வண்பரங்கி ரிக்குகனே. (சகூ)

உத்தமமா ரெவ்வு ளுறைராம சாமிசொனு
மித்தமிழ்கேட் டாளு மிறைவனே சண்வளராய். (ருO)

அருள்பரங்கி ரிக்குகன்றா லாட்டைக்கற் றோர்கண்
மருளகன்ஞா னந்திருவும் வாய்ந்துபெரும் பேறுறுவார். ()

## திருப்பரங்கிரிக் குமரவேள் தாலாட்டு

### முற்றிற்று.



உ

கடவுள் துணை.



ம-௱-௱-ஸ்ரீ வித்வான் திருஎவ்வுளூர்

இராமசாமி செட்டியாரவர்கள்

இயற்றிய

# பிள்ளைத் தாலாட்டு.

காப்பு - வெண்பா.

பெரும்புகழ்கொள் செங்கழுநீர்ப் பிள்ளையா ரென்னெஞ்
சுரும்புகன பீடமுற லாலே - கரும்புகனி
கண்டமிழ்துங் கைப்பக் கவின்பிள்ளைத் தாலாட்டு
வண்டமிழிற் பாடல் வரும்.

# ஆண்பிள்ளைத் தாலாட்டு.

இராகம் - நீலாம்புரி.

ஆராரோ ஆராரோ ஆராரோ ஆராரோ
சீராரு மெங்கள் சிரோமணியே ஆராரோ.

நற்கரும்புஞ் சர்க்கரையு நாவிம் அமுதமும்போற்
சொற்கினிசெய் முத்தமிழோ ராதிபதியே கண்வளராய்.()

தாய்மார்கள் சீராட்டத் தையலெல்லாந் தாராட்ட
ஆயுமணித் தொட்டிலிலே அற்புதமே கண்வளராய். (௨)

கின்னரி வாசிக்கக் கிளிகளுடன் பூவைகொஞ்ச
வன்னமணித் தொட்டிலிலே வாழ்வேநீ கண்வளராய். (௩)

மாற்றுயர்ந்த தங்க வடம்பூட்டித் தாராட்டிப்
போற்றி வளர்க்கவளர் புத்திரனே கண்வளராய். (௪)

பவள வடம்விளங்கப் பசுமுத்து மாலைதொங்க
நவமணிப்பூந் தொட்டிலிலே நராதிபனே கண்வளராய். (௫)

நீராட்டி யந்தி நிலாக்காட்டிப் பொட்டுமிட்டுச்
சீராட்டு மெங்கள் சிகாமணியே கண்வளராய். (௬)

வெண்ணீறு நெற்றி விளங்கவுங்கண் மைதீட்டி
நண்ண வளர்க்குமெங்கள் நாயகமே கண்வளராய். (௭)

தளதளெனுந் தண்டை சதங்கையொடு பாதசரம்
நளினமலர்த் தாளிலங்க நன்மணியே கண்வளராய். (௮)

குஞ்சுமணி பொற்சதங்கை கோலமுயர் பொன்னரைநாண்
விஞ்சுமொளி வீச விதரணனே கண்வளராய். (௯)

வைய மதிக்கு மணிக்கடகம் பாட்டிலுடன்
கையிற்பொற் காப்புங் கவின்பெறவே கண்வளராய். (௧௦)

சிறுவிரலிற் பச்சை சிறந்தவயி ரம்பதிக்கப்
பெறுமோ திரங்கள் பிறங்கவே கண்வளராய். (௧௧)

எஞ்சு மிருபுறத்து மிலங்கிரு தலைப்பட்சி
கொஞ்சுதல்போல் வங்கியுங்கை குலவவே கண்வளராய்.(௧௨)

சரப்பளிநல் வச்ரமணித் தாழ்வடமுத் தாரம்
திருப்பெறும்வண் மார்பிற் றிகழவே கண்வளராய். (௧௩)

காதில் வயிரக் கடுக்கனுயர் முருகும்
நீதமுடன் விளங்க நிதிபதியே கண்வளராய். (௧௪)

பங்காள தேசமுன்போய் பாட்டனார் கொண்டுவந்த
சிங்காரக் கொண்டை திகழவே கண்வளராய். (௧௫)

கொற்றவருங் கண்டு குதுகலிக்குஞ் சுட்டிபிறை
நெற்றிதனின் மேவி நிலவவே கண்வளராய். (௧௬)

நிலையேழ்கொள் மாடமதில் நேருமணிக் கூடமதில்
நலமாக வாழு நரேந்திரனே கண்வளராய். (௧௭)

நாளுங் குலஞ்செழிக்க நற்சீர் மனைதழைக்க
வேளெனவே வந்ததவ மெய்ப்பேறே கண்வளராய். (௧௮)

பிள்ளைகலி தீர்க்கப் பெருக்கமுடன் வந்துதித்த
வள்ளலே திவ்ய மரகதமே கண்வளராய். (௧௯)

கொங்கென்று மாறாக் குலமலர்ப்பூங் காவனத்தே
பொங்கமுடன் மேவும் புதுமலரே கண்வளராய். (உ0)

ஆக்கன்முதல் முத்தொழிற்செ யற்புதனால் வந்திசைகொள்
பாக்கியத்தி னால்விளைந்த பாக்கியமே கண்வளராய். (உக)

தாலமெங் கணுஞ்சீர் தழைத்தோங்க வேயுதித்த
பாலசுந் தரன்மகிழும் பார்த்திபனே கண்வளராய். (உஉ)

ஆன்றோர்க ளெல்லாம் அனுதினம்வந் தாசிசொலத்
தோன்றுநித்ய கல்யாண சுந்தரமே கண்வளராய். (உரு)

வாடாத பூவே மதுகரஞ்சூழ் பைங்காவே
கோடாத புஷ்பரதக் கோவேநீ கண்வளராய். (உச)

விண்ணிலுறை தேவேந்த்ரன் மெய்நடுக்கந் தீர்த்தசுப்ர
மண்ணியன்போல் வந்த மதலையே கண்வளராய். (உ௫)

நேயமே யின்பே நிறைநேர் நடுநிலையோர்
ஞாயமே கண்ணே நரபதியே கண்வளராய். (உசு)

தபலட் சணத்தோர் சதாநிதமும் வாழ்த்துஞ்
சுபலட் சணநிறைந்த தோன்றலே கண்வளராய். (உஎ)

ஆரா வமுதே அதிமதுர முக்கனியே
பேராரு மெங்கள்குலப் பேரரசே கண்வளராய். (உஅ)

எத்தேசத் துள்ளவரு மெண்ணி மிகமதிக்கு
முத்தே பவளமென்வாய் முதல்வனே கண்வளராய். (உகூ)

பூங்கா வனத்தளியே புலவர்புகழ் தண்ணளியே
பாங்காருந் தெய்வப் பசுங்கிளியே கண்வளராய். (௩0)

சிந்தா மணியே தெவிட்டாத தெள்ளமுதே
நந்தா மணிவிளக்கே நட்பேநீ கண்வளராய். (௩௧)

பொற்பா ரதிபதியே பூரண கலாமதியே
சற்பாத் திரர்புகழுந் தயாநிதியே கண்வளராய். (௩௨)

கண்ணே கருணைக் கடலே யிசைக்குயிலே
பண்ணே யினிய பழமேநீ கண்வளராய். (௩௩)

தித்திக்குஞ் செங்கரும்பே சீனிச் சருக்கரையே
எத்திக்கும் போற்றும் இலஞ்சியமே கண்வளராய். (௩௪)

கன்னல்விற்கை மன்மதனுன் கட்டழகைக் கண்டுவெட்கி
பின்னமுற்று ஞெண்சுப் பிரமணியே கண்வளராய். (௩௫)

தாயாரும் பாலூட்டத் தந்தையுமே பக்கலுற
ஓயாக் கவலையென்ன வுத்தமனே கண்வளராய். (௩௬)

மேவுமொரு நாளையிலே வேணபல வேளையிலே
கூவி யழுவதென்னே கொற்றவனே கண்வளராய். (௩௭)

ஆம்பலசொல் கேளாமல் ஆம்பல்மலர் வாய்திறந்து
தேம்புவதேன் தெய்வ சிகாமணியே கண்வளராய். (௩௮)

சுற்றுபுலி யால்வெருண்டாய் துற்பூதத் தால்மருண்டாய்
நெற்றியில்வெண் ணீறிடுவே னிருபனே கண்வளராய். (௩௯)

உரத்த புலியதையும் ஒண்புழைக்கை யானையையுந்
துரத்திவிட்டேன் ஆரமுத சோமனே கண்வளராய். (௪0)

பூனையைநீ கண்டு பொருமி யழவேண்டாம்
ஈனமற வோட்டிவிட்டே னின்னமுதே கண்வளராய். (௪௧)

## ஆண்பிள்ளைத் தா[redacted]

அக்காள் அடித்தாளோ அம்மான்மார் வைதாரோ
மிக்காகத் தேம்புவதேன் வித்தகனே கண்வளராய். (சஉ)

நீளும் பெருவாழ்வு நினக்கென்ன சொற்றாழ்வு
நாளும் வளமோங்கு நவமணியே கண்வளராய். (சங)

கட்டிகரும் பூரங் கனகதட்டி லேற்றிவைத்துத்
திட்டி கழிக்குமுன்னே திவாகரனே கண்வளராய். (சச)

மெல்லியர்கை கால்பிடித்து மெல்ல மருந்தளிப்பார்
அல்ல லுறாமல் அருந்தவமே கண்வளராய். (சரு)

மட்ட முலைதிறந்து மங்கையரும் பால்கறந்தே
இட்டமுட னீவா ரிரஞ்சிதமே கண்வளராய். (சசு)

தங்கத்தா லானைகளுந் தந்தத்தி னற்பரியும்
இங்கிதமின் னளித்தா ரிளங்கதிரே கண்வளராய். (சஎ)

பாட்டனார் பாட்டியுமே பலகாரங் கொண்டுவந்தார்
வாட்டமேன் சூடா மணியேநீ கண்வளராய். (சஅ)

தாம மலர்மாலை சரப்பளியும் அம்மான்மார்
தாமதமில் லாதளித்தார் சற்குணனே கண்வளராய். (சகூ)

சித்திரஞ்சேர் வேலைமிகத் தீர்ந்ததங்கப் பாப்பாசும்
அத்தைமார் வாங்கிவந்தார் ஆதவனே கண்வளராய். (ருo)

எழுத பொன் னோலை யெழுத்தா ணியுமிந்தப்
பொழுதே தருவேன் புரந்தரனே கண்வளராய். (ருக)

பொற்சரிகைக் குல்லாவும் பொற்சரிகை யங்கிகளும்
நற்குடையுஞ் சொக்காயு நல்குவேன் கண்வளராய். (ருஉ)

அத்தை மகளும்வந்தாள் அத்தையார் தானும்வந்தாள்
மெத்த மகிழ்ச்சியுடன் விஜயனே கண்வளராய். (௫௩)

வாச மலரெடுத்து வாசிகையா கத்தொடுத்து
நேசமுடன் மாமிதந்தாள் நித்திலமே கண்வளராய். (௫௪)

மணங்கொள்பனி நீராட்டி மல்லிகைப்பூ மேற்சூட்டி
யிணங்க வளர்க்குமெங்க ளிளங்குருந்தே கண்வளராய். (௫௫)

தாயாரு மன்புபெறத் தாதை யுளங்களிக்கச்
சேயாக வந்துதித்த செஞ்சுடரே கண்வளராய். (௫௬)

ஓசைக் குயில்கூவ வுவந்துமயில் கூத்தாட
நேசக் கிளிகள்கொஞ்ச நிலவிளக்கே கண்வளராய். (௫௭)

தக்கசீர்க் கற்பகமே சாதிநறுஞ் சண்பகமே
கெக்கலிக்கு நற்சுகமே கிஞ்சுகமே கண்வளராய். (௫௮)

ஆராரோ ஆராரோ ஆணரசே ஆராரோ
சீராரு மெங்கள் சிரோமணியே ஆராரோ.

## ஆண்பிள்ளைத் தாலாட்டு

முற்றிற்று.



உ

கடவுள்துணை.

# பெண்பிள்ளைத்தாலாட்டு.

இராகம் - நீலாம்பரி.

ஆராரோ ஆராரோ ஆரணங்கே ஆராரோ.
பேராரு மெங்கள் தவப் பெண்மணியே ஆராரோ.

நூலிபுகழ் தெய்வப் புலவர்துதி மன்னுகந்த
சாமியருளன்னவளர் சற்குணியே கண்வளராய். (௧).

அன்னைமார் சீராட்ட அழகுநல்லார் தாலாட்ட [ராய்.
பொன்னின்மணித் தொட்டிலிலே பொற்கொடியே கண்வள

பண்ணுக் கிசைந்திலங்கும் பாலே செழுங்காவே
வண்ணமுபர் மாதாவே வாழ்வேநீ கண்வளராய். (௩)

வானாட்சி மேவுசுரர் வந்திக்குந் தென்மதுரை
மீனாட்சி யின்கிருபை மேவுமின்னே கண்வளராய். (௪)

பூவுலகத் துள்ள பொருந்துசீர் மேலோர்கள்
ஆவலுடன் வாழ்த்தும் அருந்ததியே கண்வளராய். (௫)

ஒப்பிலா தோங்கும் ஒளிர்ஜீவ ரத்தினமே
முப்பார்சொல் பெண்ணனமே மோகனமே கண்வளராய். (௬)

செம்பவள வாயார் தினமும் புகழ்ந்துரைக்கும்
விம்பவள மேவும் விதுமுகத்தாய் கண்வளராய். (௭)

அமையந்தி வான்பிறைநே ராந மணிநுதற்
றமையந் திருமகிழுஞ் சம்பனியே கண்வளராய். (அ)

ஒன்றுகலா ரிந்த்ராணி போதாறுடர் சர்வாணி
கண்ணான் மதிக்குநித்ய கல்யாணி கண்வளராய். (கூ)

பாதசரந் தன்னை பளபளென நிற்பதத்தே
சோதி மிகவிளங்கச் சுந்தரியே கண்வளராய். (க௦)

அரசிலையைப் போலு மமைந்த அரைநாணு
வரிசைமணி சேர்ந்து வயங்கவே கண்வளராய். (கக)

பொற்காப்பும் பொற்கொலுசும் பொருந்து மணிவளையும்
விற்காறும் வங்கியுங்கை மேவவே கண்வளராய். (கஉ)

நத்தும் புலாக்குமலர் நாசியினும் பாவல்செவி
மெத்த வொளிவீச விதரணியே கண்வளராய். (கங)

தேங்குபுக ழூத்தார் திகழ்சப்ப ராயபிள்ளை
வாங்கியிட்ட முத்துவட மார்பசையக் கண்வளராய். (கச)

சீர்கொண்ட குப்பி சிகைத்தாடு பில்லைகுச்சம்
ஏர்கொண் டெழிற்சிரத்தி லிசைந்திடவே கண்வளராய். (கரு)

சம்பீர மென்கனியின் றன்வண்ண மேலிலங்கக்
கெம்பீர மேவுபொன்னக் கிளியேநீ கண்வளராய். (கசா)

மண்பிசைந்தே யுண்டநெடு மான்மயங்க வெந்தமின்னே
கண்பிசைந்தே யுள்ளங் கலங்குவதேன் கண்வளராய். (கஎ)

அத்தான்வந் தேசினரோ ஆகடியம் பேசினரோ
எத்தான் மனவருத்தம் ஏந்திழையே கண்வளராய். (கஅ)

சேலுங் கடலுநிகர் சீர்விழிமை தீட்டிமுலைப்
பாலுங் கொடுத்தேன் பசுங்கிளியே கண்வளராய். (௧௯)

மட்டிலாப் பூண்பூட்டி மதிநுதலிற் செந்திலகப்
பொட்டுமிட்டேன் சீர்வசந்தப் பூங்குயிலே கண்வளராய். ()

சத்தியமான் கோவிந்த ராமபின்றன் ஷாப்பினிலே
குத்தினியா வாடைவிற்குங் கொண்மமேவென் கண்வளராய். ()

வீதியினிற் சுவாமிவெகு வேடிக்கை யாகவருந்
தாதியர் காண்பிப்பார் தவப்பேறே கண்வளராய். (௨௨)

பொன்னா லமைந்தொளிரும் பூங்குடமும் ஸ்ரீபடமும்
நன்னயஞ்சேர் அத்தைதந்தாள் நாயகமே கண்வளராய். (௨௩)

தங்கத்தி னாலுறியுந் தனிவயிரச் செப்புகளும்
பொங்கமுடன் பாட்டிதந்தாள் பூவையே கண்வளராய். (௨௪)

தரைமெழுகி யுண்டுபெருந் தவமிருந்தும் பெற்ற
நிறைவடிவு மேவுமெங்கள் நித்திலமே கண்வளராய். (௨௫)

விண்ணாவ ரென்றென்றும் விரும்புஞ் சுவையமுதே
திண்ணாயமா யோங்குசங்க நிதியேநீ கண்வளராய். (௨௬)

ஓடாத மானே யுவட்டாத செந்தேனே
நீடாழி சூழ்புவியோர் நிதியமே கண்வளராய். (௨௭)

கோமே தகமே குறைவிலா வித்தகமே
மாமேவு தெய்வ மணிவிளக்கே கண்வளராய். (௨௮)

கண்ணான கண்ணே கருத்துக்கிசைந்த பண்ணே
பெண்ணான பெண்ணேயென் பெண்ணரசே கண்வளராய். ()

பொற்று மறைமேவும் பொன்னனமே மின்னினமே
நற்றமக்கு சூடும் நவமணியே கண்வளராய். (௩0)

வனஞ்சேர்நன் னேத்திரமே வாணர்புகழ் சூத்திரமே
குணஞ்சேர்சற் பாத்திரமே கோமளமே கண்வளராய். (௩௧)

பாரதியே சுத்த பவித்திரபா ரீரதியே
மாரதியே சீரதிகம் வாய்ந்தமின்னே கண்வளராய். (௩௨)

மன்பார்சொ லெவ்வுள் வருராம சாமியின்வாக்
கின்பாகக் கேட்டுவக்கு மிளங்குருந்தே கண்வளராய். (௩௩)

ஆராரோ ஆராரோ ஆரணங்கே ஆராரோ
பேராரு மெங்கள்தவப் பெண்மணியே ஆராரோ.

## பெண்பிள்ளைத் தாலாட்டு

முற்றிற்று.



சிவமயம்.

சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

ப்ரஹ்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாயர்

வே. சாமிநாதையரவர்கள்

இயற்றிய

ஸ்ரீ மத்தியார்ச்சுனம்

ஸ்ரீ ஏகநாயகர்

# தாலாட்டு.

சீர்மலிந்த கல்வியொடு செல்வமுமேன் மேல்வயங்கி
பேர்மலிந்த மாட விடைமருத நாயகரோ. (௧)

எல்லாத் தலத்து மிடைமருதே மேலாமென்
றெல்லா மளித்தாட் கியம்பியருண் மாமணியோ. (௨)

வாய்ந்த கயிலை வடிவா மருதநிழல்
ஏய்ந்த வுமையோ டெழுந்தருளி வாழரசோ. (௩)

மாகா ளிருளினிடை வந்தே யுருத்திரர்கள்
ஏகா தசரு மிறைஞ்சவெளிப் பட்டவரோ. (௪)

மாநுடமையாள் பன்னாட்செய் மாதவங்கண் டன்னாண்முன்
சோதிமகா லிங்கமாய்த் தோன்றியருள் சின்மயரோ. (௫)

கோனையென் பார்தெளிந்து கொண்டாடு மாறுதன்னைத்
தானே யருச்சித்த தண்கருணை வாரிதியோ. (௬)

காத மொருகடத்தின் கட்படிய மற்றதன்றன்
ஆகம் பசும்பொன்னா வாக்கியரு ளாரமுதோ. (௭)

பணவரவம் பூணும் பரனையென் றுண்ட
கணபதிபூ சிக்கக் கவினு முதற்பொருளோ. (௮)

மாட்சி யுரோமசன்றன் மாதவங்கண் டன்னையொடு
காட்சிகொடுத் தன்னான் கவலை கடிந்தவரோ. (௯)

இலங்கு குறுமுனிவ னென்றுவரு மென்று
நலங்கொ ளவன்வரவை நாடியுறை நாயகமோ. (௧௦)

மண்ணைக்கொ டேலென்று மாவலிக்குச் சொற்றவன்றன்
கண்ணைக் கொடுத்தவனைக் காத்தருளுங் கற்பகமோ. (௧௧)

இன்பகற்று பாவத் திடைப்பட்டோர் மூழ்கினவர்
துன்பகற்று பூசத் துறையாடுஞ் சுந்தரமோ. (௧௨)

சீமான் வரகுணப்பேர்த் தென்னவன்றன் காதலியைக்
கோமானீ கொள்ளெனவே கொண்டகுணக் குன்றமோ. (௧௩)

அல்லார் களத்தா யருளென்பார் காதலித்த
வெல்லா மருளு மிடைமருத மார்கரும்போ. (௧௪)

தேனே சுவையமுதோ தித்திக்குஞ் செய்யகனி
தானே மலைபயந்த தையலா ளாருயிரோ. (௧௫)

பிரமகத்தி மூன்றும் பெரும்பாவ நீக்கி
வரமளித்து மன்னுயிரை வாழச்செய் மாமணியே. (கசு)

மிளிர்க்கோதில் பூம்புகார்ப் பிள்ளையார் சொன்முறம்
மலர்க்கோலை கொண்டு மனமகிழ்ந்த வள்ளலே. (கஎ)

மாமேலைச் சூழ்வோர்கள் வைக்கும்படி யொன்றுந்
ஜயமேதப் பேறருளு மாரூட்சிந் தாமணியே. (கஅ)

தெய்வமில்லை யென்னுஞ் சிதடர்கடை வாய்மூடச்
,செய்வாத ஞானியர்ந் தெய்வ சிகாமணியே. (ககூ)

நீதந்த மென்றவர்க்கா நீடுகம லத்தெருவிற்
பாதஞ் சிவக்கப் பரவைமனை சென்றவரே. (உ0)

விண்ணவரும் பாதலத்தின் மேயவரு மெண்டிசையின்
கண்ணவரு நந்தவத்தைக் காதலிக்க வந்தவரே. (உக)

காவணங் காட்டுங் கடிமனையிற் சுந்தரரை
ஆவணங் காட்டி யடிமைகொண்ட வந்தனரே. (உஉ)

திருந்தடியைப் போற்றிசெயுஞ் செல்வரைமுன் கோலக்
குருந்தடியி லாண்ட குரவர் சிகாமணியே. (உ௩)

நந்தா வுலக நடுங்க வணைந்தசடையில்
மந்தா கினியை மணந்தமணா வாளரே. (உச)

மன்னுயிர்கள் யாவும் மயங்குமா மென்பதைமுன்
றென்னன் பிரம்படியாற் றேற்றுவித்த மெய்ப்பொருளோ. ()

கானந் தனில்விசயன் காண்டிபத் தாலடியுண்
டூனந் தவிர்படையொன் றீந்தருளு மெம்மானே. (உசு)

துங்கத் தமிழ்மொழியின் றூய்மையெவ ரும்மறியச்
சங்கப் புலவரிடைத் தங்கியரு ளுவலரோ. (உஎ)

செயிரா னனவினைத்துந் தீர்த்தருளும் பொன்னி
பயிரா வணத்துறையி லாடியரு ளங்கணரோ. (உஅ)

ஆரா வமுதோ வருட்கடலோ வெம்முடைய
தீராத துன்பமெலாந் தீர்க்குஞ் சிவக்கொழுந்தோ. (உகூ)

கருது மடியார் கவலையெலாம் போக்கி
மருத நிழலினிடை வாழ்ந்தருளு மாமணியே. (௩௦)

## ஸ்ரீ ஏகநாயகர் தாலாட்டு

முற்றிற்று.



உ

ஸ்ரீ சங்கரபகவத்பாதாயநம:

ஸ்ரீமத்

பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய

ஸ்ரீமத் சங்கரபகவத்பாத ஸத்குருசுவாமிகள் மீது

ஷை சுவாமிகள் திருவருள்பெற்று விளங்கிய

அச்சுதானந்த சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருத்தாலாட்டு.

---

## நியதியிற்காட்சி.

மகத்பரிபூ ரணமயமாய் மகானந்த மாயிலகுந்
சகத்குருசி சங்கரா சார்யனெனுந் தற்பரனே. (௧)

பூதமய விடயமெலாம் புடைபெயர்ந்திட் டோடும்வண்ணந்
ஹிதசர ணளிக்கத் தேடிவந்த தேசிகனே. (௨)

இந்தியங்க ளெல்லா மிரியத் திருக்கரத்தாற்
பந்தவிருட் பாசம் பறிக்கும் பழம்பொருளே. (௩)

புலனாதி கள்வழியிற் போகா தருகிருத்தி
நலமா ரருட்பார்வை நாட்டவந்த நாயகனே. (௪)

வாயு வியக்கமின் றி யரவொடுபோக் கற்றெனவாயு
மாயுமறி வோடுறங்க வமைத்தருளு மற்புதனே. (௫)

கரண விகற்பமெலாங் கழலக் கருணைசெய்யுந்
தருண மிஃதென் று தடுத்தாளுந் தாரகனே. (௬)

தத்துவங்க டம்மைத் தனித்தனியே பிரித்துணர்த்திச்
சித்தமய றன்னைச் சேதிக்குஞ் சிபதியோ. (௭)

முத்தேகங் கட்கு மறவா விலட்சணமாய்க்
கத்தவிய மற்றிருக்குங் காட்சியாங் காரணனே. (௮)

அவத்தாத் திரய வனுரூத சாட்சியதாய்த்
தவத்தாற் பெறும்பேறாய்ச் சார்கின்ற தன்மயனே. (௯)

ஐந்துகோ சங்கடமை யணையா வெதிரேக
வெந்தைமா தேவோ விருக்காதி கண்முடிவோ. (௧௦)

தத்துவா தீதத் தனிப்பரமாய்த் தற்சொருபத்
தொத்தோ வியம்போ லொளிர்கின்ற வொண்மயனே. (௧௧)

சிவோசுர சகத்தின் றிமிரமெலாந் தீர்த்தருளுந்
தேவாந் தினகரன்போற் றிகழ்தருசின் மாத்திரனே. (௧௨)

திரிசியங்க டாமாய்த் திரியா தெனதுளத்தி
லிரிசியற்றிக் காக்கு மருளார்ந்த வாரியனே. (௧௩)

நானிவனென் றுன்னும னடுவா யிலங்குறவே
தானமரு நிலையிதெனச் சாற்றுஞ் சகத்குருவே. (௧௪)

மாயை யவித்தையெலா மாண்டவழி காணும
லோயும் படியருளி லொன்றவைக்கு முத்தமனே. (௧௫)

சத்தாகித் தாமெனைக்குத் தண்ணருள்செய் தாண்டருளுந்
சித்தாகி யானந்தச் செல்வமாஞ் சிற்கனமே. (௧௬)

பெத்தமுத்தி காலத்தும் பிரியா துயிர்க்குயிரா
நித்தசுத்த புத்தமுத்த நின்மல நிருபகமே. (௧௭)

துவிதப் பிழையறக்கத் தூரங்கட்டி யொன்றாக்கி
விவிதச்சங் கற்பமெலாம் வேரறச்செய் வித்தகமே. (௧௮)

துவிதாத் துவிதங்க டோன்றுவா னந்தவெள்ளச்
சுவையா ரமுதமுண்டு சொக்கவரு ருய்மையமே. (௧௯)

என்னைபழித் தெழுந்த வின்பப் பெருக்கோபின்
றன்னையெனக் களித்த சமரசசாட் சாத்பரமே. (௨௦)

இவ்வண்ணந் தாலாட்டு மெம்போ லியார்கடமைக்
கவ்வமல விருடீரக் கதிர்பரப்புங் கருணையமே. (௨௧)

ப்ரஹ்மார்ப்பணம்.



## திருத்தாலாட்டு

முற்றிற்று.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

# தாலாட்டு.

[இஃது அவர் சிஷ்யர் அருளிச்செய்தது.]

உலகுபுகழ் மெய்கண்டா னுண்மைஞா னாகரத்தின்
பலனுணர்ந்த சிற்றம் பலநாடித் தேசிகனே. (௧)

வாயே மனமே வரையற்ற வோருரைபா
னீயேநா னென்று நிலைமை யளித்தானே. (௨)

தெய்வநீ ராடிச் சிவாலயங்கள் கைதொழுது
மெய்வருந்தா தப்பாநீ நானென்ற வேதியனே. (௩)

மையில்விரற் றோயாமல் கண்சிமிட்டி நோகாம
லையமுளத் தாக்காம லாண்டபரி பூரணனே. (௪)

பட்டினி விட்டுப் பலநாள் வருந்தாமே
இட்ட மெனக்கு முனக்குமென்ற வீசுரனே. (௫)

கோயில்லெலம் வந்துபத கோகனகம் வாடாதே
நேயவருள் வெள்ளம் நிறைவித்த வாண்டகையே. (௬)

பேராதர வாகப் பேரறிவு போதித்த
சீராசைச் சிற்றம் பலநாடித் தேசிகனே. (௭)

நீயறிவா னத்தனு நாமிதனை நீக்கியதே
காயவறி வென்றருளாற் காட்டுங் கருணையனே. (௮)

கண்ணொரு மூன்றுங் கனற்கரமு மைம்முகமு
மண்ணவர்க்குங் காணு வகையொளித்து வைத்தானே. (௯)

தர்க்கம் படித்துத் தலைவெடித்துக் கொள்ளுவதைக்
கற்கவினை யாதருளைக் காட்டுங் கருணையனே. (௧௦)

கைம்மாறு போதமறக் காசினியோர் நாலைவிட்டு
நம்மானை சும்மா விருவென்ற நாயகனே. (௧௧)

ஐம்மலமு மைந்தொழிலு மான்மாவு மையறிவும்
பொய்யலவே யென்றிதனைப் போதித்த புண்ணியனே. (௧௨)

போன வழியெல்லாம் போகா தொடியெறிந்து
தானவனுக் கும்பெருமை தந்த தவபபயனே. (௧௩)

பார்க்கிற் சுகமதுவாய்ப் பாரா விடினுலகா
யார்க்கு மளப்பரிய வானந்த வாரிதியே. (௧௪)

அஞ்சுமலத் தானு மழிவா யிருந்தவெனை
அஞ்சுமல நீக்கி யழியாமல் வைத்தானே. (௧௫)

பேதப் படுத்தல் பிராந்திதமே மும்மலமும்
வேதப் பொருண்முடிவே நீயென்ற வேதியனே. (௧௬)

சீர்புறவ மேனைத் திகழு மெனதுள்ள
மூரதுவாய்க் கொண்டிருந்தே யென்னையொழித் தானே. (௧௭)

சேர்வையாந் தொண்டரிடஞ் சேரும் பவக்கடலைப்
பார்வையான் மாற்றிப் பதியாக்கி வைத்தானே. (௧௮)

பதிக்குப் பதியாய்ப் பரத்துக்கு மப்பாலாய்
விதிக்கும் விதியாய் விதிக்கும் பெருமானே. (௧௯)

தேவர் முனிவர் சித்தாந்தத் தோர்மறையோர்
மூவரவர்க் கப்பாலு மூவா முழுமுதலே. (௨௦)

எங்கெங்குந் தானாகி யென்போ லுருக்கொண்டு
மங்கும் பிறவிதனை மாற்றவந்த வள்ளலே. (௨௧)

தாளை வணங்கத் தலையாம் பதங்கொடுக்கும்
வேளைநகர்ச் சிற்றம் பலநாடி வித்தகனே. (௨௨)

காணாற் கரியானே கண்மூன் றுடையானே
தாணுவே சங்கரனே சச்சிதா னந்தனே. (௨௩)

மேலுக்கு மேலாய் விருப்பாய் வெறுப்பாகி
நாலுக்குங் காண்பரிய நுண்ணியனே வையாநீ. (௨௪)

சொன்ன கமத்துஞ் சுருதிக்கு மெட்டாத
தன்ன தனமெனக்குத் தந்த தனிச்சுடரோ. (௨௫)

ஆலயங்கள் தேடி யலையாதே யுன்னிடத்தே
சாலவுநீங் காதிருப்போஞ் சத்தியமீ தென்றாரோ. (௨௬)

மானங் குலைந்து மதியழிந்து நான்கெட்டால்
நானென்று நீயென் றிரண்டில்லை யென்றாரோ. (௨௭)

பேறிழ வின்பம் பிணிமூப்புச் சாக்காடென்
றாறுங் கருவி லமைத்ததுனக் கென்றாரோ. (௨௮)

மேலாந் திணையிரண்டாய் மெய்யா யுயிர்க்குயிராய்
நாலாம் பராபரமாம் நாயகனைச் சொன்னாரார். (சഠ)

உள்ளங்கண்ட வெல்லா மொன்றாகி நின்றவொளி
யுள்ளங் குதிகொண் டொருமுதலாய் நின்றோரா. (சக)

செய்வினைக ளெல்லாந் திருவினைகள் தாமாக்கி
யுய்யவெனை யாண்டருளு முத்தமனைச் சொன்னாரார். (சஉ)

வன்னம் புவனம்வருந் தத்துவிதமாங் கலையென்
றுன்னுமிட மென்னிடமென் றற்றானைச் சொன்னாரார். ()

அண்டபிண்ட முள்ள மருளுருவே கோயிலெனக்
கொண்டொருவ ரும்மறியாக் கொற்றவனைச் சொன்னாரார்.()

இன்னவடி வின்னநிற மின்னபடி யென்றறியா
துன்னு மிடத்தி லுதித்தானைச் சொன்னாரார். (சரு)

பார்த்து நினைத்தும் பரிசித்தும் பாவமறத்
தேத்துநினை வைக்கொடுத்த வெங்கோனைச் சொன்னாரார்.()

சிந்தையிலுற் றார்க்குஞ் சிவலோக வீடளித்துப்
பந்த மகற்றும் பராபரனைச் சொன்னாரார். (சஎ)

பேதாதி பேதமாய்ப் பேரறிவா மோருரையே
யாதார மாகுமென்ற வற்புதனைச் சொன்னாரார். (சஅ)

மூன்றுவினை கண்டார்க்கு முற்றுங் கெடவகற்றித்
தோன்றுவினை மாற்றுஞ் சுகோதயமே கண்வளரீர். (சகூ)

மெய்ஞ்ஞானக் கண்வளர மெய்கண்டான் மெய்வளர
வஞ்ஞானக் கண்ணகற்று மையர்திருக் கண்வளரீர். (ருo)

சுத்த மசுத்தஞ் சுகமசுக மானந்த
நித்த மநித்தமென நின்றோரே கண்வளரீர். (ருக)

முத்தொழிலாற் செய்த முறையுலகெ லாம்வளர
வத்தரே சிராசை யையரே கண்வளரீர். (ருஉ)

வையம் வளர மறையோர் தொழில்வளர
மெய்யும் வளரவருள் மேகமே கண்வளரீர். (ருங)

சொல்லுக் கடங்காச் சுகாதீத மெய்ப்பொருளே
யல்ல லறுத்தாண்ட வாதியே கண்வளரீர். (ருச)

இன்ப மிரண்டு மியற்றியதற் கின்பமுமா
யன்பு நிறைந்த வருட்கடலே கண்வளரீர். (ருரு)

சமையத்தில் வீழாமற் றற்பரத்தி லாழாம
லமையக் கருணைதந்த வாதியே கண்வளரீர். (ருசா)

சத்திமல மைந்துந் தருவதுநாம் போக்குதல்நா
முத்தியுநா மென்ற முழுமுதலே கண்வளரீர். (ருஎ)

கீழுலகு முற்றுங் கிளரொளியாய் நின்றபதம்
வாழவடி யேன்முன்னே வருந்த நடந்தாரோ. (ருஅ)

வேதாவு மாலும் விளம்புதற்கு மெட்டாத
போதானந் தச்சொரூபப் புண்ணியநீ யென்றாரோ. (ருகூ)

கண்ணாலுங் காணாக் கருத்துக்கு மெட்டாதா
யுண்ணாடி யுண்ணாடு முத்தமரே கண்வளரீர். (சாO)

ஓங்காரத் துள்ளொளியி னுள்ளே தனைக்காட்டி
நீங்காமற் றாங்கருவத்த நிட்களனார் வாழியரோ. (சாக)

சித்தாந்த சித்த விகற்பமது நீரவுடல்
முத்தனு மென்ற முழுமுதலே கண்வளரீர். (சுஉ)

ஒன்றிரண்டு மூன்றற் றொருநாலொ டைந்தொன்பா
னின்றதெல்லாந் தானாகி நின்றாரே கண்வளரீர். (சுங)

## சீகாழிச் சிற்றம்பலநாடிகள் தாலாட்டு

முற்றிற்று.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

மஹாவித்வான் காஞ்சிபுரம்

சபாபதி முதலியாரவர்களியற்றிய

# திருஞானசம்பந்தசுவாமிகள்

# திருத்தாலாட்டு.

காப்பு.

*சீரார்சம் பந்தர்மேல் சிறந்திடுதா லாட்டுரைக்கக்*
*காரார்கல் யானைமுகக் கணபதிதாள் காப்பாமே.*

## நூல்.

சிவபாத விருதயர்முன் செய்யு மருந்தவத்தால்
புவிமீது காழியினில் போந்தருளுந் தேசிகனே. (௧)

பண்பின் மிகுமன்னை பகவதியார் தங்கரத்தில்
நண்பி னொடுவளர்ந்த நல்ல தவக்கொழுந்தோ. (௨)

தீர்த்தக் கரையின்முக்கண் செல்வரொடு போந்துமைகண்
பார்த்தருளு மெய்ஞ்ஞானப் பாலுண்ட தேசிகனே. (௩)

எம்பந்த மெல்லாம் ஈடறுக்க வந்தருளும்
சம்பந்த னென்னும்பேர் தாங்குங் குருபரனே. (௪)

தந்தைகண்டு கேட்கத் தனிவிரலாற் சுட்டியிவர்
தந்ததெனத் தோடுடைய தண்மொழிசொல் வியகுருவோ ()

கோலக்கா விற்றிருக்கை கொட்டியிசை பாடமகிழ்
நீலமிடற் றன்றுளம் நீட்டப் பெறுமணியோ. (சு)

முத்துச் சிவிகை முதலான சின்னமெல்லாம்
அத்த னரத்துறையான் அளிக்கப் பெறுமணியோ. (எ)

உபநயஞ்செய் தாரணிந்தந் தோமென்னும் வேதியர்க்குச்
சுபமொழியான் மறையாவும் சொல்லியருண்மெய்க்குருவோ.

பாச்சிலாச் சிராமத்தோர் பார்த்திபனார் தம்மகட்கு
வாய்ச்ச முயலகனைய் மாற்று மருமருந்தோ. (கூ)

அவ்வினைக்கிவ் வினையென்னும் அருள்சேர் திருமொழியால்
எவ்வமிகு வெம்மைநோய் ஈடழித்த தெள்ளமுதோ. (கo)

பட்டீச் சுரத்தரனார் பரிந்தருளும் வெண்முத்துக்
கட்டாரும் பந்தர் களிப்பாய்ப் பெறுமணியோ. (கக)

தந்தைமகஞ் செய்வதற்குத் தருக்கிளரா வடுதுறையில்
முந்தையுல வாக்கிழிகொள் மூவா வருட்கனியோ. (கஉ)

நீலகண்ட யாழ்ப்பாணர் நின்றுவிண் ணப்பஞ்செய்யக்
கோலவிசை யாழ்மூரி கூறுமறை வித்தகனே. (கங)

திருமருக விற்சேர்ந்தோர் செட்டிமக னுற்றவிடம்
அருகி யழிய அருளமுத மீந்தவனே. (கச)

திருவீழி மிழலையினில் சிவனார்பொற் காசருளப்
பெருமையுடன் கொண்டருளும் பிஞ்ஞகனார் தம்மகனே. ()

வாசியுற்ற தென்றமறையோர் வாய்மொழிகேட் டப்பின்னும்
வாசிதீ ரப்பாடி மகிழ்ந்த குடபரனே. (கசு)

மறைக்காட்டிற் சொல்லரசை மறையடைத்த திருக்கதவம்
திறக்கும்வகை பாடுமெனச் செப்புந் தவக்கொழுந்தோ. (கஎ)

சதுரம் மறையென்னும் சந்தவிசை யோதியெழில்
முதிருங் கதவடைக்க முன்னுகவு ணியர்வேந்தோ. (கஅ)

தளரிளவென் றேயோதித் தாண்டகவேந் தோடுமிகு
வளமருவு வாய்மூர்வாழ் வள்ளலருள் பெற்றநிதியோ. (க௯)

பாண்டிநா டெங்குமமண் பரவிய தென்னக்கேட்டு
நீண்டசமண் காடழிக்க நீறுநினைந் தெழுமரசோ. (உ0)

நாளொடுகோ ளடியார்க்கு நல்லவென்றியா வருமுணரக்
கோளறுசீர்ப் பதிகவிசை கூறுதமி ழாகரனே. (உக)

ஆலவாய் கண்டுமங்கை யர்க்கரசி யென்னுமிசைக்
கோலமிகு பதிகம் கூறிப் பணிகுருவோ. (உஉ)

வெஞ்சமணர் தாமடத்தில் மீதுசெந்தீ யிடவெகுண்டு
பஞ்சவனைப் பற்றும்வகை பாடியசின் மயவொளியோ. (உங)

தென்னவனைப் பற்றும்வெம்மைத் தீயபிணி தீரவருள்
துன்னித் திருநீறு தொட்டருண்ஞா னக்கன்றோ. (உச)

வாதுமேற் கொண்டெரியில் வைத்ததிரு வேடவைமுன்
கோதகலக் காட்டியிசை கொள்ளுந் தவக்கொழுந்தோ. (உரு)

வாழ்கவந் தணரென்னும் வாய்மைத் திருப்பதிகம்
வீழ்கங்கை நேர்வைபை மேலெதிர விடுந்தேவோ. (உசு)

அந்நதியி லிட்டவே டதிவிரைவ தாச்செல்ல
வன்னியுமத் தழும்பாடி. மறிக்குங் குணமணியோ. (உஎ)

வேந்தனுமோங்குகவென் னும்மெய்மொழியாற்றென்னவற்கு
வாய்ந்த கூனீங்கி மகிழ வருள்குருவோ. (உஅ)

அன்பர் குலச்சிறையார் அமைத்த கழுமரத்தில்
புன்சமணா ரேறவரும் புறச்சமயக் கோளரியோ. (உகூ)

கொட்டமே கமழுமெனும் கோலவிச யோதியன்பர்
இட்டமொடு தோணியினில் ஏறவரு மெய்க்குருவோ. (௩0)

வந்தெதிர்த்த புத்தநந்தி மாளும்வகை யவன்றலையில்
உந்து மிடிவிழ உரைத்தார்க் குயிர்த்துணையோ. (௩க)

சாறுசெயுஞ்சாரிப்புத்தன் வாயடங்கிச் சிவநெறிக்குள்
போதமலர்க் கண்ணமுதம் பொழியு மருணிதியோ. (௩உ)

அரும்புமாண் பனைகாய்க்க அத்தர்திரு வோத்தூரில்
குரும்பையாண் பனையென்னக் கூறுமிசைக் கற்பகமோ. (௩௩)

மட்டிட்ட புன்னையெனும் வாய்மொழியான் மயிலையினில்
அட்டிடுபவெள்ளெலும்பொருபெண் ணாகவருடண்ணளியோ

நல்லூர்ப் பெருமணத்தில் நம்பர்திரு வடிநிழற்கீழ்
நல்லன்ப ரொடுஞ்சேர்மெய் ஞானச் சுகோதயனே. (௩௫)

சாத்தமங்கை நீலநக்கர் சந்தஞ்சிந் திக்கவரும்
பூத்தமலர்த் தாமரைத்தார் புனையுந் திருப்புயனே. (௩௬)

என்றுமுல வாக்காழி யேயுங் கணநாதர்
நன்றருச்சித் தேத்தியின்பம் நண்ணவருங் காரணனே. (௩எ)

கண்ணுடைய வள்ளலெனுங் கருமுகின்மெய்ஞ் ஞானநீர்
உண்ணப் பெருகியளக் கொண்ணு வருட்கடலோ. (௩௮)

நன்றுதீ தென்றறியா நாயேன் வினையிருளில்
துன்றியலை யாதருளத் தோன்றுந் தினகரனோ. (௩௯)

என்னவன்பாற் றாலாட்டி யவர்களு மின்பமுறத்
துன்னியரு ளுங்காழித் தூயகவு ணியர்வேந்தே. (௪௦)

வாழிசிவம் வாழிமறை வாழியறம் வாழிசைவம்
வாழிநீ றஞ்செழுத்தும் வாழியடி யவர்வாழி. (௪௧)

திருஞானசம்பந்தசுவாமிகள்

திருத்தாலாட்டு

முற்றிற்று.

---

# தாலாட்டுப் பிரபந்தம்

முற்றுப்பெற்றது.



